ஓம்

ராமாய மாப்வத
ஸுவிஸ்த்ருத ஷட்³கு³ணாய
ஸர்வேஶ்வராய
ப³லவீர்ய மஹார்ணவாய |
நத்வா லிலங்க⁴யிஷு
ரர்ணவ முத்பபாத
நிஷ்பீட்³ய தம்
கி³ரிவரம் பவநஸ்ய ஸூநு : || 1

ஸுக்ஷோப⁴ வாரிதி⁴ ரநு
ப்ரயயௌ ச பரிக்⁴ரம்
யாதோ³ க³ணை : ஸஹ ததீ³ய
ப³லாபி⁴க்ருஷ்ட : |
வ்ருக்ஷாஶ்ச பர்வதக³தா :
பவநேந பூர்வம்
க்ஷிப்தோர்ணவே கி³ரி
ருத³க³மத்³ஸ்ய ஹேதோ : || 2

மாலோ ஹரஸ்ய
கி³ரிபக்ஷ விநாமகாலே
க்ஷிப்தோர்ணவே ஸ
மருதோர் வரிதாத்மபக்ஷ : |
ஹைமோ கி³ரி : பவநஜஸ்ய து
விஶ்ரமார்த²ம்
உத்³பி⁴த்³ய வாரிதி⁴
மவர்த⁴த³ நேகஸாநு : || 3

நைவாத்ர விஶ்ரமண மைச்ச²
த³விஶ்ரமோஸௌ
நிஸ்ஸீம பௌருஷப³லஸ்ய
குத : ஶ்ரமோஸ்ய |
ஆஶ்லிஷ்ய பர்வதவரம்
ஸ த³த³ர்ஶ க³ச்ச²ந்
தே³வைஸ்து நாக³ஜநநீம்
ப்ரஹிதாம் வரேண || 4

ஜிக்³ஞாஸுபி⁴ர் நிஜப³லம்
தவ ப⁴க்ஷ்யமேது
யத்³யத்³ த்வமிச்ச²ஸி
ததி³த்யமரோதி³தாயா : |
ஆஸ்யம் ப்ரவிஶ்ய ஸபதி³
ப்ரவிநிஸ்ஸ்ருதோஸ்மாத்
தே³வா நநந்த³ய து³த
ஸ்வ்ருதமேஷு ரக்ஷந் || 5

த்³ருஷ்ட்வா ஸுர ப்ரணயிதாம்
ப³லமஸ்ய சோக்³ரம் |
தே³வா : ப்ரதுஷ்டுவு ரமும்
ஸுமநோபி⁴ வ்ருஷ்ட்யா ||
தைராத்³ருத : புநரஸௌ
வியதைவ க³ச்ச²ந்
ச²ாயாக்³ரஹம் ப்ரதித³த³ர்ஶ ச
ஸிம்ஹிகாக்²யம் || 6

லங்காவநாய ஸகலஸ்ய ச
நிக்³ரஹேஸ்யா :
ஸாமர்த்²ய மப்ரதிஹதம்
ப்ரத³தௌ³ விதா⁴தா |
சா²யாமவாக்ஷிப த³ஸௌ
பவநாத்மஜஸ்ய
ஸோஸ்யா : ஶரீர
மநுவிஶ்ய பி³பே⁴த³ சாஶு || 7

நிஸ்ஸீம மாத்மப³ல மித்
யநுத³ர்ஶயாநோ
ஹத்வைவ தாமபி
விதா⁴த்ரு வராபி⁴கு³ப்தாம் |
லம்பே³ ஸ லம்ப³ஶிக²ரே
நிபபாத லங்கா
ப்ராகார ரூபக கி³ராவத²
ஸஞ்சுகோச || 8

பூ⁴த்வா பி³டா³ல ஸமிதோ
நிஶி தாம் புரீம் ச
ப்ராப்ஸ்யந் த³த³ர்ஶ
நிஜரூபவதீம் ஸ லங்காம் |
ருத்³தோ⁴நயாஶ்வத²
விஜித்ய ச தாம் ஸ்வமுஷ்டி
பிஷ்டாம் தயாநுமத
ஏவ விவேஶ லங்காம் || 9

மார்க³மாணோ ப³ஹிஶ்சாந்த :
ஸோஶோக வநிகாதலே |
த³த³ர்ஶ ஶிம்ஶுபா வ்ருக்ஷ
மூலஸ்தி²த ரமாக்ருதிம் || 10

நரலோக விட³ம்ப³ஸ்ய
ஜாநந் ராமஸ்ய ஹ்ருத்³க³தம் |
தஸ்ய சேஷ்டாநுஸாரேண
க்ருத்வா சேஷ்டாஶ்ச ஸம்வித³ம்|| 11

தாத்³ருக் சேஷ்டா ஸமேதாயை
அங்குளீய மதா³த் தத : |
ஸீதாயா யாநி சைவாஸந்
நாக்ருதேஸ் தாநி ஸர்வஶ : |
பூ⁴ஷணாநி த்³விதா⁴ பூ⁴த்வா
தாந்யேவாஸம்ஸ்ததை²வ ச || 12

அத²சூடா³மணிம் தி³வ்யம்
தா³தும் ராமாய ஸா த³தௌ³ || 13

யத்³யப்யேதே ந பஶ்யந்தி
நிஶாசர க³ணாஸ்து தே |
த்³யுலோக சாரிண : ஸர்வே
பஶ்யந்த்ய்ருஷ ஏவ ச || 14

தேஷாம் விட³ம்ப³நாயைவ
தை³த்யாநாம் வஞ்சநா ச |
பஶ்யதாம் கலிமுக்²யாநாம்
விட³ம்போ³யம் க்ருதோ ப⁴வேத்|| 15

க்ருத்யா கார்ய மித3ம் ஸர்வம்
விஶங்க : பவநாத்மஜ : |
ஆத்மாவிஷ்கரணே சித்தம்
சக்ரே மதிமதாம் வர : || 16

அத2 வநமகி2லம் தத்3
ராவணஸ்யாவலும்ப்ய
க்ஷிதிருஹ மிமமேகம்
வர்ஜயித்வாஶு வீர : |
ரஜநிசர விநாஶம்
காங்க்ஷமாணோதிவேலம்
முஹுர திரவ நாதீ3
தோரணம் சாருரோஹ || 17

அத2ாஸ்ருணோத்3 த3ஶாநந :
கபீந்த்3ர சேஷ்டிதம் பரம் |
தி3தே3ஶ கிங்கராந் ப3ஹூந்
கபிர் நிக்3ருஹ்யதாமிதி || 18

ஸமஸ்தஶோ விம்விருத்யவோ
வராத் தரஸ்ய கிங்கரா : |
ஸமாஸத3ந் மஹாப3லம்
ஸுராந்தராத்மநோங்க3ஜம் || 19

அஶீதி கோடியூத2பம்
புரஸ்ஸராஷ்டகாயுதம் |
அநேக ஹேதி ஸங்குலம்
கபீந்த்3ர மாவ்ருணோத் ப3லம் || 20

ஸமாவ்ருதஸ் ததா3யுதை4 :
ஸ தாடி3தஸ்ச தைர் ப்4ருஶம் |
சகார தாந் ஸமஸ்தஶ :
தலப்ரஹார சூர்ணிதாந் || 21

புநஸ்ச மந்த்ரி புத்ரகாந்
ஸ ராவண ப்ரசோதி3தாந் |
மமர்த ஸப்த பர்வத
ப்ரப4ாந் வராபி4 ரக்ஷிதாந் || 22

ப3லாக்3ர க3ாமிநஸ் தத3ா
ஸ ஶர்வவாக் ஸுக3ர்விதாந் |
நிஹத்ய ஸர்வரக்ஷஸாம்
த்ருதீயபா4க3 மஹிணோத் || 23

அநௌபமம் ஹரேர் ப3லம்
நிஶம்ய ராக்ஷஸாதி4ப : |
குமார மக்ஷமாத்மந :
ஸமம் ஸுதம் ந்யயோஜயத் || 24

ஸ ஸர்வலோகஸாக்ஷிண :
ஸுதம் ஶரைர் வவர்ஷ ஹ |
ஶிதைர் வராஸ்த்ர மந்த்ரிதைர்
ந சைந மப்4யசாலயத் || 25

ஸ மண்ட3 மத்4யகாஸுதம்
ஸமீக்ஷ்ய ராவணோபமம் |
த்ருதீய ஏஷ சாம்ஶகோ
ப3லஸ்ய ஹீத்யசிந்தயத் || 26

நித4ார்ய ஏவ ராவண :
ஸ ராக4வாய நாத்யதா3 |
யதி3ந்த்3ர ஜிந் மயா ஹதோ
ந சாஸ்ய ஶக்தி ரீக்ஷ்யதே || 27

அதஸ்தயோ : ஸாமா மயா
த்ருதீய ஏஷ ஹந்யதே |
விசார்ய சைவமாஶு தம்
பதோ3 : ப்ரக்3ருஹ்ய புப்லுவே || 28

ஸ சக்ரவத் ப்4ரமாதுரம்
விதா4ய ராவணாத்மஜம் |
அபோத3யத்3 த4ராதலே
க்ஷணேந மாருதீதநு : || 29

விசூர்ணிதே த4ராதலே
நிஜே ஸுதே ஸ ராவண : |
நிஶம்ய ஶோகதாபிதஸ்
தத3க்3ரஜம் ஸமாதி3ஶத் || 30

அதேந்த்3ரஜிந் மஹாஶரை :
வராஸ்த்ரஸம்ப்ரயோஜித : |
ததக்ஷ வாநரோத்தமம்
ந சாகஸ்த் விசாலநே || 31

அத2ாஸ்த்ர முத்தமம் விதே4 :
யுயோஜ ஸர்வ து3ஸ்ஸஹம் |
ஸ தேந தாடி3தோ ஹரி :
வ்யசிந்தயந் நிராகுல : || 32

மயா வரா விலங்கி4தா
ஹ்யநேகஶ : ஸ்வயம்பு4வ : |
ஸ மாநநீய ஏவ மே
ததோத்ர மாநயாம்யஹம் || 33

இமே ச குர்யு ரத்ர கிம்
ப்ரஹ்ருஷ்ட ரக்ஷஸாம் க3ண : |
இதீஹ லக்ஷ்ய மேவ மே
ஸ ராவணஶ்ச த்3ருஶ்யதே || 34

இத3ம் ஸமீக்ஷ்ய ப3த்3த4வத்
ஸ்தி2 தம் கபீந்த்3ர மாஶுதே |
ப3ப3ந்து4 ரந்யபாஶகைர்
ஜக3ாம சாஸ்த்ர மஸ்ய தத் || 35

அத2 ப்ரக்3ருஹ்ய தம் கபிம்
ஸமீப மாநயம்ஶ்ச தே |
நிஶாசரேஶ்வரஸ்ய தம்
ஸ ப்ருஷ்டவாம்ஶ்ச ராவண : || 36

கபே குதோஸி கஸ்ய வா
கிமர்த2மீத்3ருஶம் க்ருதம் |
இதீரித : ஸ சாவத3த்
ப்ரணம்ய ராம மீஶ்வரம் || 37

அவைஹி தூ3தமாக3தம்
து3ரந்த விக்ரமஸ்ய மாம் |
ரகூ4த்தமஸ்ய மாருதிம்
குல க்ஷயே தவேஶ்வரம் || 38

ந சேத் ப்ரத³ாஸ்யஸி த்வரந்
ரக்ஷ⁴த்தம ப்ரியாம் தத³ா |
ஸபுத்ர மித்ர பா³ந்த⁴வோ
விநாஶ மாப்ஸ்யஸி || 39

ந ராமபா³ண தா⁴ரணே
க்ஷமா : ஸுரேஶ்வரா அபி |
விரிஞ்ச பூர்வபூர்வகா :
கிமு த்வ மல்பஸாரக : || 40

ப்ரகோபிதஸ்ய தஸ்ய க :
புர : ஸ்தி²தௌ க்ஷமோ ப⁴வேத் |
ஸுராஸுரோரகா³ தி³கே
ஜக³த்யசிந்த்ய கர்மண : || 41

இதீரிதே வதே⁴ாத்³யதம்
ந்யவாரயத்³ விபீ⁴ஷண : |
ஸ புச்ச²தா³ஹ கர்மணி
ந்யயோஜயந் நிஶாசராந் || 42

அதா²ஸ்ய வஸ்த்ர ஸஞ்சயை :
பிதா⁴ய புச்ச² மக்³நயே |
த³து³ர் த³தா³ஹ நாஸ்ய தந்
மருத்ஸகோ²ஹுதாஶந : || 43

மமர்ஷ ஸர்வ சேஷ்டிதம்
ஸ ரக்ஷஸாம் நிராமய : |
ப³லோத்³த⁴தம்ச கௌதுகாத்
ப்ரத³க்³து⁴மேவ தாம் புரீம் || 44

த³தா³ஹ சாகி²லாம் புரீம்
ஸ்வபுச்ச²கே³ந வஹ்நிநா |
க்ருதிஸ்து விஶ்வகர்மணோ
ப்ரத³ஹ்யதாஸ்ய தேஜஸா || 45

ஸுவர்ண ரத்ந காரிதாம்
ஸ ராக்ஷஸோத்தமை : ஸஹ |
ப்ரத³ஹ்ய ஸர்வத : புரீம்
முதா³ந்விதோ ஜக³ர்ஜ ச || 46

ஸ ராவணம் ஸபுத்ரகம்
த்ருணோபமம் விதா⁴ய ச |
தயோ : ப்ரபஶ்யதோ : புரீம்
விதா⁴ய ப⁴ஸ்மஸாத்³ யயௌ || 47

விலங்க்⁴ய சார்ணவம் புந :
ஸ்வஜாதிபி⁴ : ப்ரபூஜித : ||
ப்ரப⁴க்ஷ்ய வாநரேபிது :
மது⁴ப்ரபு⁴ம் ஸமேயிவாந் || 48

ராமம் ஸுரேஶ்வர
மக³ண்யகு³ணாபி⁴ராமம்
ஸம்ப்ராப்ய ஸர்வ
கபிவீர வரை : ஸமேத : |
சூடா³மணிம் பவநஜ :
பத³யோர் நிதா⁴ய-
ஸர்வாங்க³கை : ப்ரணதி
மஸ்ய சகார ப⁴க்த்யா || 49

ராமோபி நாந்ய த³நுத³ாது
மமுஷ்ய யோக்³ய-
மத்யந்த ப⁴க்தி ப⁴ரிதஸ்ய
விலக்ஷ்ய கிஞ்சித் |
ஸ்வாத்ம ப்ரதா³ந மதி⁴கம்
பவநாத்மஜஸ்ய
குர்வந் ஸமாஶ்லிஷத³மும்
பரமாபி⁴ துஷ்ட : || 50

---



# ஸ்ரீ ஸீதா ராமாஷ்டகம்

(ஸ்ரீ அச்யுதயதி ரசிதம்)

ப்3ரஹ்ம மஹேந்த்3ர
ஸுரேந்த்3ர மருத்3க3ண
ருத்3ர முநீந்த்3ர க3ணை ரதிரம்யம்
க்ஷீரஸரித்பதி தீரமுபேத்ய
நுதம் ஹி ஸதா மவிதார முதா3ரம் |
பூ4ரி ப4ர ப்ரஶமார்த2 மத2 ப்ரதி2த
ப்ரகடீக்ருத சித்3க4ந மூர்திம்
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபதா3ம்பு3ஜ
தா3ஸ்யம் || 1

பத்3மத3ளாயத லோசந ஹே
ரகு4வம்ஶ விபூ4ஷண தே3வ
த3யாளோ !
நிர்மல நீரத3 நீலதநோ கி2ல-
லோக ஹ்ருத3ம்பு3ஜ பா4ஸக
பா4நோ |
கோமல கா3த்ர பவித்ர பத3ாப்3ஜ
ரஜ: கண பாவித கௌ3தம காந்த
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 2

பூர்ண பராத்பர பாலய மாமதிதீ3ந-
மநாத2 மநந்த ஸுகாப்3தே4
ப்ராவ்ருட3த்3ப்4ர தடித் ஸுமநோஹர
பீத வராம்ப3ர ராம நமஸ்தே |
காம விப4ஞ்ஜந காந்த தராநந
காஞ்சந பூ4ஷண ரத்நகிரீட
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபதா3ம்பு3ஜ
தா3ஸ்யம் || 3

தி3வ்ய ஶரச்ச2ஶி காந்தி ஹரோஜ்வல
மௌக்திக மால விஶால
ஸுமௌலே
கோடிரவி ப்ரப4சாருசரித்ர
பவித்ர விசித்ர த4நு: ஶரபாணே |
சண்ட3மஹாபு4ஜ த3ண்ட
விக2ண்டி3த
ராக்ஷஸ ராஜ மஹா க3ஜத3ண்ட3ம்
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 4

தோ3ஷ விஹிம்ஸ்ர பு4ஜங்க3 ஸஹஸ்ர
ஸுரோஷ மஹாநல கீல கலாபே
ஜந்ம ஜராமரணோர்மி மயே
மத3 மந்மத2 நக்ர விசக்ர
ப4வாப்3தௌ4 |
து3க்க2நிதௌ4 ச சிரம் பதிதம்
க்ருபயாத்3ய ஸமுத்3த4ர ராம
ததோ மாம்
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 5

ஸம்ஸ்ருதி கோ4ர மதோ3த்கட குஞ்ஜர
த்ருட்க்ஷுத4 நீரத3 பிண்டி3த
துண்ட3ம்
த3ண்ட3கரோந் மதி3தம் ச ரஜஸ்தம
உந்மத3 மோஹ பதோ3ஜ்ஜி4த
மார்தம் |
தீ3ந மநந்ய க3திம் க்ருபணம்
ஶரணாக3த மாஶு விமோசய மூட4ம்
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 6

ஜந்ம ஶதார்ஜித பாப ஸமந்வித
ஹ்ருத் கமலே பதிதே பஶுகல்பே
ஹே ரகு4வீர மஹாரண தீ4ர
த3யாம் குரு மய்யதி மந்த3 மநீஷே |
த்வம் ஜநநீ ப4கி3நீ ச பிதா
மம தாவத3ஸி த்வவிதாபி
க்ருபாளோ
த்வாம் ப4ஜதோ ரகு4 நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 7

த்வாம் து த3யாளு மகிஞ்சந வத்ஸல
முத்பல ஹார மபார முதா3ரம்
ராம விஹாய கமந்ய மநாமய
மீஶ ஜநம் ஶரணம் நநு யாயாம் |
த்வத்பத3பத்3ம மத: ஶ்ரிதமேவ
முதா3 க2லு தே3வ ஸ்த3ாவ ஸஸீத
த்வாம் ப4ஜதோ ரகு4நந்த3ந தே3ஹி
த3யாக4ந மே ஸ்வபத3ாம்பு3ஜ
தா3ஸ்யம் || 8

ய : கருணும்ருத ஷிந்து⁴ ரநாத²
ஜநோத்தம ப³ந்து⁴
ரஜோத்தமகாரி
ப⁴க்த ப⁴யோர்மி ப⁴வாப்³தி⁴ தரி :
ஸரயூ தடிநீ தட சாரு விஹாரீ |

தஸ்ய ரகு⁴ ப்ரவரஸ்ய நிரந்தர
மஷ்டக மேதத³நிஷ்ட ஹரம் வை
யஸ்து படே² த³மர: ஸ நரோ லப⁴தே
(அ) ச்யுத ராமபதா³ம்பு³ஜ
தா³ஸ்யம் || 9

இதி ஸ்ரீமங் மது⁴ஸூத³நாஶ்ரம ஶிஷ்ய அச்யுதயதி விரசிதம்
ஸ்ரீஸீதாராமாஷ்டகம் ஸம்பூர்ணம்.

---

## ஸ்ரீ பெரியாழ்வாரும் அங்குளீயக ப்ரதானமும்

[ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச்செய்த 'பெரியாழ்வார் திருமொழி'யில் மூன்றும் பத்தின் பத்தாம் திருமொழி, "நெறிந்த கருங்குழல்" என்பதாம். அத்திருமொழி ஸ்ரீ ராமபிரான் வாக்காக, "ஸ்ரீ ஸீதா பிராட்டிக்கு ஹநுமான் தெரிவித்த அடையாளம்" ஆகும். எனவே, ஸ்ரீமத் ராமாயண ஸுந்தர காண்ட பாராயணம் செய்வோர் அப்பெரியாழ்வார் பாசுரங்களையும் அநுஸந்தித்தால் எம்பெருமான் அருளை எளிதின் எய்துவது திண்ணம் என்னும் கருத்துடனேயே அத்திருமொழியை இக்காண்டத்தின் அநுபந்தமாக இணைத்துள்ளோம். பக்தர்கள் இத்திருமொழியையும் நாள்தோறும் பாராயணம் செய்து நற்பயன் பெறுவாராக.]

### "நெறிந்த கருங்குழல்"

(ஸ்ரீ பெரியாழ்வார் திருமொழி 3-10)

### சீதைக்கு அநுமான் தெரிவித்த அடையாளம்

1. நெறிந்தகருங் குழல்மடவாய்! நின்னடியேன் விண்ணப்பம்,
செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்து நினைக்கொணர்ந்த
தறிந்து, அரசு களைகட்ட அருந்தவத்தோ னிடைவிலங்க,
செறிந்தசிலை கொடுதவத்தைச் சிதைத்ததுமோ ரடையாளம்.

2. அல்லியம்பூ மலர்க்கோதாய்! அடிபணிந்தேன் விண்ணப்பம்,
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே!
எல்லியம்போ தினிதிருத்தல் இருந்ததோ ரிடவகையில்,
மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ ரடையாளம்.

3. கலக்கியமா மனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட,
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறாதொழிய,
குலக்குமரா! காடுறையப் போவென்று விடைகொடுப்ப,
இலக்குமணன் தன்னொடுமங் கேகியதோ ரடையாளம்.

4. வாரணிந்த முலைமடவாய்! வைதேவீ! விண்ணப்பம்,
தேரணிந்த அயோத்தியர்கோன் பெருந்தேவீ! கேட்டருளாய்,
கூரணிந்த வேல்வலவன் குகனோடும் கங்கைதன்னில்,
சீரணிந்த தோழமை கொண்டதுமோ ரடையாளம்.

5. மானமரு மென்னேக்கி ! வைதேவீ ! விண்ணப்பம்,
காானமரும் கல்லதர்போய்க் காடுறைந்த காலத்து,
தேனமரும் பொழிற்சாரல் சித்திரகூ டத்திருப்ப,
பால்மொழியாய்! பரதநம்பி பணிந்ததுமோ ரடையாளம்.

6. சித்திரகூ டத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட,
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி,
வித்தகனே ! இராமாவோ ! நின்னபயம் என்றழைப்ப,
அத்திரமே அதன்கண்ணை அறுத்ததுமோ ரடையாளம்.

7. மின்னொத்த நுண்ணிடையாய்! மெய்யடியேன் விண்ணப்பம்,
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட,
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம் பிரானேக,
பின்னேஅங் கிலக்குமணன் பிரிந்ததுமோ ரடையாளம்.



8. மைத்தகுமா மலர்க்குழலாய் ! வைதேவீ ! விண்ணப்பம்,
ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத்தேட,
அத்தகுசீ ரயோத்தியர்கோன் அடையாள மிவைமொழிந்தான்
இத்தகையால் அடையாளம் ஈதவன்கைம் மோதிரமே.

9. திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்றந்நாள்,
மிக்கபெருஞ் சபைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்டு,
ஒக்குமா லடையாளம் அநுமான்! என்று உச்சிமேல்
வைத்துக் கொண்டு, உகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே.

10. வாராரும் முலைமடவாள் வைதேவி தனைக்கண்டு,
சீராரும் திறல்அநுமன் தெரிந்துரைத்த அடையாளம்,
பாராரும் புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான் பாடவல்லார்,
ஏராரும் வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே.

ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீ குலசேகராழ்வாரின் ஸ்ரீமத் ராமாயண ஸங்க்ரஹம்

[ஸ்ரீ குலசேகராழ்வார் 'பெருமாள் திருமொழி' என்கிற திவ்ய ப்ரபந்தத்தை அருளி லோகத்தை வாழ்வித்தருளினர். கடைசி திருமொழியாகிற பத்தாம் திருமொழியில் தில்லைநகர்த் திருச்சித்திர கூடமதில் தொல்வி ராமனுய்த் தோன்றிய கதைமுறையைப் பேசி அநுபவிக்கிருர். இத்திருமொழி 'ஸ்ரீ ராமாயண ஸங்க்ரஹம்' எனப்படும். இனிய தமிழ்ப் பிரபந்த ரூபமான இப்பத்துப் பாசுரங்களையும் கற்று வல்லவர்கள் பரமபதத்தில் விளங்குகிற ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளின் அனுக்ரஹம் அவசியம் அடையப் பெறுவர்.]

### "அங்கணெடு மதிள்"
(பெருமாள் திருமொழி—10)

#### பால காண்டம்

1. அங்கணெடு மதிள் புடை
சூழயோத்தி யென்னும்
அணி நகரத்துலகனைத்தும் விளக்
கும் சோதி,
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்
காய்த் தோன்றி
விண்முழுது முய்யக்கொண்ட
வீரன்றன்னை,
செங்கணெடுங் கருமுகிலை
யிராமன்றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
எங்கள் தனிமுதல்வனை யெம்
பெருமான் றன்னை
யென்றுகொலோ கண்குளிரக்
காணுநாளே.

2. வந்தெதிர்ந்த தாடகை
தனுரத்தைக் கீறி
வருகுருதிபொழி தரவன்கணை
யொன்றேவி,
மந்திரங்கொள் மறைமுனிவன்
வேள்விகாத்து
வல்லரக்க ருயிருண்ட மைந்தன்
காண்மின்.
செந்தளிர்வாய்மலர் நகைசேர்
செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
அந்தணர்களொரு மூவாயிரவரேத்த
அணிமணி யாசனத்திருந்த
அம்மான் தானே.

3. செவ்வரிநற்கரு நெடுங்கண்
சீதைக்காகிச்
சினவிடை யோன் சிலையிறுத்து
மழுவாளேந்தி,
வெவ்வரி நற்சிலைவாங்கி
வென்றிகொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்த
வீரன்றன்னை.
தெவ்வரஞ்சநெடும் புரிசையுயர்ந்த
பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
எவ்வரிவெஞ்சிலைத் தடக்கை
யிராமன்றன்னை
இறைஞ்சுவாரிணையடியே
யிறைஞ்சினேனே.

#### அயோத்யா காண்டம

4. தொத்தலர் பூஞ்சுரிகுழல்கைகேசி
சொல்லால்
தொன்னகரந்துறந்து
துறைக்கங்கை தன்னை,
பத்தியுடைக்குகன் கடத்த வனம்
போய்புக்குப்
பரதனுக்குப்பாதுகமுமரசு மீந்து,
சித்திர கூடத்திருந்தான்றன்னை
யின்று
தில்லைநகர்த் திருச்சித்ரகூடத்
தன்னுள்,
எத்தனையும் கண்குளிரக்காணப்
பெற்ற
இருநிலத்தார்க்கிமையவர்
நேரொவ்வார்தாமே.

#### ஆரண்ய காண்டம்

5. வலவணக்குவரை நெடுந்தோள்
விராதைக் கொன்று
வண்டமிழ்மாமுனி கொடுத்த
வரிவில் வாங்கி,
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை
நீக்கிக்
கரனேடு தூடணன்றனுயிரை
வாங்கி,
சிலைவணக்கி மான்மரியவெய்தான்
றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்.

தலைவணங்கிக் கைகூப்பி
யேத்தவல்லார்
திரிதலால் தவமுடைத்தித்
தரணிதானே.

### ஆரண்ய, கிஷ்கிந்தா, ஸுந்தர காண்டங்கள்

6. தனமருவு வைதேகி பிரியலுற்றுத்
தளவெய்திச் சடாயுவை
வைகுந்தத் தேற்றி,
வனமருவு கவியரசன் காதல்
கொண்டு
வாலியைக் கொன்றிலங்கை
நகரரக்கர் கோமான்,
சினமடங்க மாருதியால்
சுடுவித்தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
இனிதமர்ந்தவம்மானை
யிராமன்றன்னை
ஏத்துவாரிணையடியே
யேத்தினேனே.

### யுத்த காண்டம்

7. குரைகடலை யடலம்பால்
மறுகவெய்து
குலைகட்டிமறுகரையை யதனுலேறி,
எரிநெடுவேலரக்கரொடு மிலங்கை
வேந்தன்
இன்னுயிர் கொண்டவன் தம்பிக்
கரசுமீந்து,
திருமகளோடினிதமர்ந்த
செல்வன்றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
அரசமர்ந்தா னடிசூடு மரசை
யல்லால்
அரசாகவெண்ணேன்
மற்றரசுதானே.

8. அம்பொனெடு மணிமாட
அயோத்தி யெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த்தான்
முன்கொன்ருன்
தன், பெருந்தொல்கதைகேட்டு
மிதிலைச்செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த
மக்கள்,
செம்பவளத்திரன் வாய்த் தன்சரிதை
கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்,
எம்பெருமான்றன்சரிதை செவியால்
கண்ணுல்
பருகுவோ மின்னமுதை மதியோ
மின்றே.

### உத்தர காண்டம்

9. செறிதவச் சம்புகன்றன்னைச்
சென்று கொன்று
செழுமறையோனுயிர்மீட்டுத்
தவத்தோனீந்த,
நிறைமணிப்பூணணியுங்கொண்டி
லவணன்றன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன்
வேண்ட,
திறல்விளங்கு மிலக்குமனைப்
பிரிந்தான்றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்
உறைவானை, மறவாதவுள்ளந்தன்னை
யுடையோம் மற்றுறுதுயர
மடையோமின்றே.

10. அன்று சராசரங்களை வைகுந்தத்
தேற்றி
அடலரவப்பகையேறி
யசுரர்தம்மை
வென்று, இலங்குமணி நெடுந்தோள்
நான்கும் தோன்ற
விண்முழுதுமெதிர்வரத்
தன்தாமமேவி,
சென்றினிது வீற்றிருந்த
வம்மான்றன்னைத்
தில்லைநகர்த் திருசித்ரகூடந்தன்னுள்,
என்றும் நின்ருனவனிவனென்றேத்தி
நாளு
மிறைஞ்சுமினோ வெப்பொழுதும்
தொண்டீர் நீரே.

### பலனுரைக்கும் பாசுரம்

11. தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன்னுள்
திறல்விளங்கு மாருதியோ
டமர்ந்தான்றன்னை,
எல்லையில் சீர்த் தயரதன் தன்
மகனுய்த் தோன்றிற்
றதுமுதலாத் தன்னுலகம் புக்கதீறு,
கொல்லியலும் படைத்தானைக்
கொற்றவொள்வாள்
கோழியர்கோன் குடைக்
குலசேகரன் சொற் செய்த,
நல்லியரின் தமிழ் மாலைபத்தும்
வல்லார்
நலந்திகழ் நாரணனடிக்கீழ்
நண்ணுவாரே.

ஸ்ரீ குலசேகரப்பெருமான் திருவடிகளே சரணம்

ஸ்ரீ

## ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை தொகுத்தருளிய திவ்யப் பிரபந்த பாசுர ராமாயணம்

[ராமாயண தத்வார்த்தங்களை உலகுக்கு உவந்தருளிய ஸ்ரீ பெரிய வாச்சான்பிள்ளை என்னும் மாமுனிவர், பன்னிரு ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்த பாசுரங்களிலுள்ள பதங்களையே தொகுத்து, ராமாயணமாக அருளிச்செய்திருக்கிறார். இதை அநுதினமும் பாராயணம் செய்தால், நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைப் பாராயணம் செய்த பலனும், ராமாயண பாராயண பலனும் ஒருங்கே கிடைக்கும்.]

### பால காண்டம்

திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ
நலமந்தமில்லதோர் நாட்டில்
அந்தமில் பேரின்பத்தடிய ரோடு
ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யான
அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பன்
அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாய் போல்
ஆவாரார் துணையென்று துளங்கும்
நல்ல அமரர் துயர் தீர
வல்லரக்கர் இலங்கை பாழ்படுக்கஎண்ணி
மண்ணுலகத்தோ ருய்ய
அயோத்தி என்னும் அணி நகரத்து
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்க்
கௌசலைதன் குல மதலையாய்த்
தயரதன் தன் மகனாய்த் தோன்றிக்
குணம் திகழ் கொண்டலாய்
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காக்கநடந்து
வந்தெதிர்ந்த தாடகை தன்உரத்தைக் கீறி
வல்லரக்கர் உயிருண்டு கல்லைப் பெண்ணாக்கிக்
காரார் திண்சிலை யிறுத்து,
மைதிலியை மணம் புணர்ந்து
இருபத் தொருகால் அரசு களை கட்ட
மழுவாளி வெவ்வரி நற்சிலை வாங்கி வென்றிகொண்டு
அவன் தவத்தை முற்றும் செற்று
அம்பொனெடு மணிமாட அயோத்தி எய்தி

### அயோத்தியா காண்டம்

அரியணை மேல் மன்னன் ஆவான் நிற்கக்
கொங்கைவன் கூனி சொற் கொண்ட
கொடிய கைகேயி வரம் வேண்ட
அக் கடிய சொற் கேட்டு-
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனுமறாதொழியக்
குலக்குமரா! காடுறையப்போ என்று விடை கொடுப்ப
இந்நிலத்தை வேண்டாது
ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமும் ஆங்கொழிந்து
மைவாய களிறொழிந்து மாவொழிந்து தேரொழிந்து
கலனணியாதே காமரெழில் விழலுடுத்து
அங்கங்கள் அழகு மாறி

மானமரு மென்னேக்கி வைதேவி யின்துணையா
இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின்செல்லக்
கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்து போய்ப்
பத்தியுடைக் குகன் கடத்தக் கங்கை தன்னைக் கடந்து
வனம் போய்ப் புக்குக் காயோடு நீடு கனியுண்டு
வியன் கானம ரத்தி நீழல்
கல்லணைமேல் கண்துயின்று
சித்திரகூடத் திருப்ப, தயரதன்தான்
'' நின் மகன் மேல் பழிவிளைத்திட்டு
என்னையும் நீள்வானில் போக்க
என் பெற்றாய் கைகேசீ !
நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன் ''
என்று வானேறத்
தேனமரும் பொழில்சாரல் சித்திரகூடத்து
ஆனை புரவி தேரொடு காலாள்
அணி கொண்ட சேனை சுமந்திரன்
வசிட்டருடன் பரத நம்பி பணியத்
தம்பிக்கு மரவடியை வான்பணயம் வைத்துக் குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற் கருளிவிடை கொடுத்துத்
திருவுடை திசைக்கருமம் திருத்தப்போய்த்
தண்ட காரணியம் புகுந்து

## ஆரண்ய காண்டம்

மறை முனிவர்க்கு
' அஞ்சேல்மின் !' என்று விடை கொடுத்து
வெங்கண் விறல் விராதனுக்கு விற்குனித்து
வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப்
புலர்ந்தெழுந்த காமத்தால் சீதைக்கு நேராவன்
என்னப் பொன்னிறங் கொண்ட
சுடு சினத்த சூர்ப்பணகாவைக்
கொடி மூக்கும் காதி ரண்டும்
கூரார்ந்த வாளால் ஈரா விடுத்துக்
கரனொடு தூடணன் தன்னுயிரை வாங்க
அவள் கதறித் தலையில் அங்கை வைத்து
மலையிலங்கை யோடிப்புகக்
கொடுமையில் கடுவிசை அரக்கன்
அலை மலி வேற் கண்ணாளை அகல்விப்பான்
ஒருருவாய் மானை யமைத்துச் சிற்றெயிற்று
முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து
இலைக் குரம்பில் தனி யிருப்பில்
கனி வாய்த் திருவினைப் பிரித்து
நீள் கடல்சூழ் இலங்கையில்
அரக்கர் குடிக்கு நஞ்சாகக் கொடுபோய்
வம்புலாங்கடிகாவில் சிறையாய்வைக்க
அயோத்தியர்கோன் மாயமான் மாயச் செற்று
அலைமலிவேற் கண்ணாளை அகன்று தளர்வெய்திச்
சடாயுவை வைகுந்தத்தேற்றிக்
கங்குலும் பகலும் கண் துயிலின்றிக்
கானகம் படி யுலாவி யுலாவிக்
கணை யொன்றினால் கவந்தனை மடித்துச்
சவரிதந்த கனியுவந்து

## கிஷ்கிந்தா காண்டம்

வன மருவு கவியரசன் தன்னோடு காதல்கொண்டு
மரா மரமேழெய்து
உருத்தெழு வாலி மார்பில்
ஒரு கணை உருவ ஓட்டிக்
கருத்துடைத் தம்பிக்கு
இன்பக் கதிர் முடி அரசளித்து
வானரக் கோனுடனிருந்து வைதேகி தனைத்தேட
விடுத்த திசைக் கருமம் திருத்து
திறல் விளங்கு மாருதியும்
மாயோன் தூதுரைத்தல் செப்ப !

## ஸுந்தர காண்டம்

சீராரும் திறல் அநுமன் மாக்கடலைக் கடந்தேறி
மும்மதிள் நீள் இலங்கை புக்குக்கடிகாவில்
வாராருமுலை மடவாள் வைதேவி தனைக்கண்டு
நின்னடியேன் விண்ணப்பம் கேட்டருளாய் !
அயோத்தி தன்னில் ஓர்
இடவகையில் எல்லியம் போதினிதிருத்தல்
மல்லிகை மாமாலை கொண்டங்கார்த்ததும்
கலக்கியமா மனத்தளாய்க் கைகேயி வரம்வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறுதொழியக்
'குலக்குமரா ! காடுறையப்போ' என்று விடைகொடுப்ப
இலக்குமணன் தன்னோடங்கேகியதும்,
கங்கை தன்னில்,
கூரணிந்த வேல்வலவன் குகனோடு
சீரணிந்த தோழமை கொண்டதுவும்,
சித்திரகூடத் திருப்பப் பரத நம்பி பணிந்ததுவும்
சிறுகாக்கை முலைதீண்ட மூவுலகும் திரிந்தோடி
'வித்தகனே ! ராமாஓ ! நின்னபயம்' என்ன
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித் தெம்பிரானேகப்
பின்னேயங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்
'அயோத்தியர் கோனுரைத்த அடையாளம்
ஈதவன்கை மோதிரமே' என்று
அடையாளம் தெரிந்துரைக்க
மலர்குழலாள் சீதையும்,
வில்லிறுத்தான் மோதிரம் கண்டு,
'அநுமான் அடையாளம் ஒக்கும்' என்று
உச்சிமேல் வைத்துகக்கத்
திறல் விளங்கு மாருதியும்
இலங்கையர்கோன் மாக்கடிகாவை யிறுத்து,
காதல் மக்களும் சுற்றமும் கொன்று,
கடி இலங்கை மலங்க எரித்து
அரக்கர்கோன் சினமழித்து மீண்டு, அன்பினால்
அயோத்தியர்கோன் தளிர்புரையும் அடியிணைபணிய

## யுத்த காண்டம்

கான எண்கும் குரங்கும் முசுவும்
படையாக் கொடியோனிலங்கை புகலுற்று
அலையார் கடற்கரை வீற்றிருந்து
செல்வ விபீடணற்கு நல்லானாய்

விரிநீ ரிலங்கை யருளிச்
சரண்புக்க குரைகடலை அடலம்பால் மறுகஎய்து,
கொல்லை விலங்கு பணிசெய்ய
மலையாலணைகட்டி மறுகரையேறி
இலங்கை பொடி பொடியாகச்
சிலைமலி செஞ்சரங்கள் செல வுய்த்துக்
கும்பனோடு நிகும்பனும்பட
இந்திரசித் தழியக் கும்பகர்ணன் பட
அரக்கராவி மாள, அரக்கர்
கூத்தர் போலக் குழமணி தூரமாட
இலங்கை மன்னன் முடி யொருபதும்
தோளிருபதும் போயுதிரச்
சிலைவளைத்துச் சரமழை பொழிந்து
கரந்துணிந்து வெற்றிகொண்ட செருக்களத்துக்
கடிக்கமல நான்முகனும், கண்மூன்றத்தானும்
எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
மற்றுமுள்ள வானவர் மலர்மழை பொழிந்து
மணிமுடி பணிதர அடியிணை வணங்கக்
கோலத்திருமா மகளோடு
செல்வவிடணன் வானரக் கோனுடன்
இலகுமணி நெடுந்தேரேறி,
சீரணிந்த குகனொடுகூடி
அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி எய்தி
நன்னீராடிப்
பொங்கிளவாடை யரையில் சாத்தித்
திருச்செய்ய முடியும் ஆரமும் குழையும்
முதலா மேதகு பல்கலனணிந்து
சூட்டு நன் மாலைகளணிந்து
பரதனும் தம்பி சத்துருக்கனனும்
இலக்குமணனும் இரவு நண்பகலும் ஆட்செய்ய
வடிவிணை இல்லாச் சங்குதங்கு முன்கை நங்கை
மலர்க்குழலாள் சீதையும் தானும்
கோப்புடைய சீரிய சிங்கா தனத்திருந்து ஏழுலகும்
தனிக்கோல் செல்ல வாழ்வித்தருளினார்.

திவ்ய ப்ரபந்த பாசுர ராமாயணம் முற்றிற்று

---

## கம்பராமாயணம்



[ ஸ்ரீமத் ராமாயணமென்னும் மஹாகாவியத்தை இயற்றி ஆதிகவியாக விளங்கினார் ஸ்ரீ வால்மீகி பகவான். அவரே தமிழைத் தழைக்கச் செய்யவும், தமிழரை உய்விக்கவும் கம்ப நாட்டாழ்வாராக நம் நாட்டில் அவதரித்தார் என்பர் நம் பெரியோர்.

வடமொழியில் வால்மீகிபகவான் அருளிச்செய்த ராமகாதையை, தேன் பொழியும் தென்மொழியில் வருணித்துள்ளார் கம்ப நாட்டார்.

நடந்ததை நடந்தபடியே சொல்லும் வரம்புக்குட்பட்ட வால்மீகியைப் போலன்றி, சந்தர்ப்பத்திற்கேற்றவாறு, மூலக்கதை சிதையாமல், பக்தி ரஸத்தைக் கொண்டு பல இடங்களில் ராமசரித்திரச் சித்திரத்தை அழகாகத் தீட்டியிருக்கிறார் கம்பகவி.

பரமபாகவதரான கம்பர், வைணவ சமயாசார்யர்களின் கூடஸ்தரும், ஆழ்வார்களின் முன்னணியை அணி செய்பவருமான நம்மாழ்வாரிடம் பரம பக்தி பூண்டவர். அதற்கேற்ப, 'சடகோபரந்தாதி'யால் வாயார நம்மாழ்வாரைத் துதி செய்திருக்கிறார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் ஈடுபட்டு, சக்கரவர்த்தித் திருமகனைப் 'பறவையேறு பரமபுருட'னாகவே பாவித்து, பக்திரஸம் பெருகும்படி ஸ்ரீ ராமகாதையைப் பாடினார் கம்ப நாட்டாழ்வார்.

ஆகவே, கம்ப ராமாயணத்திலிருந்து இங்கு தரப்பட்டுள்ள சில பாடல்களைத் தினந்தோறும் ஒரு தரம் பாராயணம் செய்து உய்வோமாக! ]

### தேவர்களுக்கு விஷ்ணு தரிசனம்

கருமுகில் தாமரைக்காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத்தேந்தி யேந்தலர்த்
திருவொடும் பொலியவோர் செம்பொற்குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்துதோன்றினான்.

—(பால) திருவவதாரப் படலம்-13

### அயோத்தியின் சிறப்பு

நிலமகள் முகமோ? திலகமோ? கண்ணோ?
நிறை நெடு மங்கல நாணோ?
இலகு பூண்முலைமேல் ஆரமோ? உயிரின்
இருக்கையோ? திருமகட்கு இனிய
மலர்கொலோ? மாயோன் மார்பின் நன்மணிகள்
வைத்தபொன் பெட்டியோ? வானோர்
உலகின்மேல் உலகோ ஊழியின் இறுதி
உறையுளோ? யாது என உரைப்பாம்?

—(பால) நகரப் படலம்-2

### ஸ்ரீ ராமாவதாரம்

மேடமாமதி திதிநவமி மீன்கழை
நீடுறு மாலை கற்கடக நீதிசேர்
ஓடமாகளிறனானு தயராசிகோள்
நாடினே காதசர் நால்வருச்சரே.

—(பால திருவவதாரப் படலம்-110

### ஸ்ரீ ஸீதா ஜனனம்

உழுகின்ற கொழு முகத்தினுதிக்கின்ற கதிரொளிபோல்
பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட்டெனப் புணரி
எழுகின்ற தெள்ளமுதோடெழுந்தவளு மிழிந்தொதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்.

—(பால) கார்முகப் படலம்-17

### விசுவாமித்திர யாகஸம்ரக்ஷணம்

கண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்.

—(பால) வேள்விப் படலம்-41

### அகலிகை சாபவிமோசனம்

இவ்வண்ண நிகழ்ந்த வண்ணம் இனிஇந்த உலகுக்கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ணமுறுவதுண்டோ
மைவண்ணத் தரக்கிபோரில் மழைவண்ணத் தண்ணலே உன்
கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக்கண்டேன்.

—(பால) அகலிகைப் படலம்-82

### ஸ்ரீராம ஸௌந்தரியம்

தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழல் கமலம அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார்
தடக்கை கண்டாரும் அஃதே
வாள் கொண்ட கண்ணார் யாரே
வடிவினைமுடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னான்
உருவுகண்டாரை ஒத்தார்.

—(பால) உலாவியற் படலம்-19

### ஸ்ரீ ராம ஸீதா லக்ஷ்மணர்கள் ஸௌந்தரியம்

நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந்தோறும் குரிசிற்கும் அன்னதேயால்
நம்பியைக் காண்மின் என்பார் தவமுடைதது உலகம் என்பார்
இம்பர் இந்நகரில் தந்த முனிவனை இறைஞ்சும் என்பார்.

—(பால) கார்முகப் படலம்-43

### பரதனின் பெருமை

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா !

—(அயோ) குகப் படலம்-35

### விராதன் இராமரைத் துதித்தல்

தாய்தன்னை அறியாத கன்றில்லை தன்கன்றை
யாயு மறியு முலகின்தாய் ஆகினைய
நீயறிதி எப்பொருளும் அவையுன்னை நிலையறியா
மாயையிது என்கொலோ வாராதே வரவல்லாய்.

—(ஆ) விராதவதைப் படலம்-55

### சீதாபிராட்டி அநுமனை வாழ்த்துதல்

பாழிய பணைத்தோள் வீர துணையிலேன் பரிவு தீர்த்த
வாழி வள்ள லேயான் மறுவிலா மனத்தேன் என்னின்
ஊழியோர் பகலா போதும் யாண்டெலாம் உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள்.

—(சுந்) உருக்காட்டுப் படலம்-72

### திருமுடி சூடல்

அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி.

—(உயு) திருமுடி சூட்டுப் படலம்-38

### கடவுள் வணக்கம்

வெள்ளியங் கிரியை மீதே வேரொடு மெடுத்த வீரக்
கள்ளவன் புயநாலைந்தும் கனகமா மவுலி பத்தும்
துள்ளியம் புவிமேல் வீழ ஒருகணை தொடுத்து விட்ட
வள்ளலம் புயமே யன்ன மலரடி வணக்கம் செய்வாம்.

—உத்தர காண்டம்

### பலசுருதி

இராவணன்றன்னை வீட்ட யிராமனுய் வந்து தோன்றித்
தராதல முழுதுங் காத்துத் தம்பியுந்தானுமாகப்
பராபர மாகி நின்ற பண்பினைப்பகருவார்கள்
நராபதி யாகிப் பின்னு நமனையும் வெல்லுவாரே.

—(உயு) விடை கொடுத்த படலம்-38

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாஷையாதொன்றிருயினும்
திடமுள ரகுகுலத்திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

—பால காண்டம்



## ஸ்ரீ வால்மீகியும்

[ஸ்ரீமத் ராமாயண ரஹஸ்யார்த்தங்களை உலகுக்களித்த ஸ்ரீ தியாகராஜர் ஸ்ரீ வால்மீகி பகவானின் அவதாரமே என்பர். அதற்கெடுத்துக்காட்டாக திருவையாற்றில் அமைந்துள்ள ஸ்ரீ வால்மீகி மண்டபச் சுவரில் சலவைக் கல்லில் பொறிக்கப்பட்ட தியாகராஜ கீர்த்தனைகளும் ஸ்ரீ வால்மீகி, லவ, குசர்கள் பிரதிமைப் படங்களுமாகும்.]

శుద్ధబంగాళ

రామభక్తిసామ్రాజ్య మే మానవుల కబ్బెనో మనసా — ఆది
ఆమానవుల సందర్శన మత్యంత బ్రహ్మానందమే — రామ
ఈలాగని వివరింపలేను చాలా స్వానుభవవేద్యమే — రామ
లీలాసృష్ట జగత్త్రయమనే కోలాహల త్యాగరాజ నుతుఁడగు — రామ

శహాన

---

ఊరకే గల్గునా రాముని భక్తి — చాపు
సారెకును సంసారమునఁ జొచ్చి సారమని యెంచు వారిమనసున — ఊ
ఆలుసుతులు చుట్టాలు వరసదనాలు కాయబలాలు కనకధ
నాలు గల విభవాలగని యస్థిరాలనే భాగ్యశాలులకుఁగాక — ఊ
మంచివారిని పొడగాంచి సంతతము సే-
వించి యామనవాలకించి యాదరి సా
ధించి సర్వము హరియంచుఁదెలిసి భా-
వించి మదిని బూజించువారికిఁగాక — ఊ
రాజసగుణయుక్త పూజల నొసరించ-
కా జనన్నుత త్యాగరాజుని జిహ్వపై
రాజిల్లు వరమంత్ర రాజమునను స-
దా జపించు మహారాజులకు గాక — ఊ

కీరవాణి — ఆది

---

కలిగియుంటే గదా కల్గును కామితఫలదాయక — క
కలిని ఇంగిత మెఱుఁగక నిన్నాడుకొంటి
చలము చేయక నా తలను చక్కని వ్రాత — క
భాగవతాగ్రేసరులగు నారద ప్రహ్లాద పరాశర రామదాసులు
బాగుగ శ్రీరఘురాముని పదముల భక్తిఁ జేసినరీతి త్యాగరాజుని కిపుడు — క

ముఖారి — ఆది

---

కారుబారు సేయువారు గలరే నీవలె సాకేతనగరిని — కా
ఊరివారు దేశజనులు వరమునులుప్పొంగుచు భావుకులయ్యే — కా
నెలకు మూడువాన లఖిలవిద్యల నేర్పు కలిగి దీర్ఘాయువు కలిగి
చలము గర్వరహితులుగాలేదా సాధు త్యాగరాజవినుత రామ — కా

SHRI SRI PRAKASA
GOVERNOR OF MADRAS.

# ஸ்ரீ தியாகராஜரும்

**சுத்தபங்காள (1) ஆதி**

பல்லவி

ராமப4க்தி ஸாம்ராஜ்ய மே
மாநவுல கப்3பெ3நோ மநஸா
(ராம)

அநுபல்லவி

ஆமாநவுல ஸந்த3ர்ஶந
மத்யந்த ப்3ரஹ்மாநந்த3மே
(ராம)

சரணம்

ஈலாக3நி விவரிம்பலேநு
சாலா ஸ்வாநுப4வ
வேத்3யமே

லீலா ஸ்ருஷ்ட ஜக3த்த்ரய
மநே கோலாஹல த்யாக3
ராஜ நுதுட3கு3 (ராம)

**ஸஹாநு (2) சாபு**

பல்லவி

ஊரகே கல்கு3நா ராமுநி
ப4க்தி (ஊ)

அநுபல்லவி

ஸாரெகுநு ஸம்ஸாரமுந
ஜொச்சி ஸாரமநியெஞ்சு
வாரி மநஸுந (ஊ)

சரணம்

ஆலுஸுதுலு சுட்டாலு
வரஸ்த3நாலு காயப3லாலு
கநகத4நாலுக3ல விப4வால
க3நி யஸ்தி3 ராலநே
பா4க்3ய ஶாலுலகு க3ாக
(ஊ)

மஞ்சிவாரிநி பொட3க3ாஞ்சி
ஸந்ததமு ஸேவிஞ்சி
யா மநவாலகிஞ்சி யாத3ரி
ஸாதி4ஞ்சி ஸர்வமு ஹரி
யஞ்சு தெ3லிஸி பா4விஞ்சி
மதி3நி பூ3ஜிஞ்சு வாரிகி
க3ாக (ஊ)

ராஜஸ கு3ணயுக்த பூஜல
நொநரிஞ்ச காஜ ஸந்நுத
த்யாக3ராஜுநி ஜிஹ்வபை
ராஜில்லு வரமந்த்ர ராஜமு
நநு ஸத3ா ஜபிஞ்சு மஹா
ராஜுலகு க3ாக . (ஊ)



**கீரவாணி (3) ஆதி**

பல்லவி

கலிகி3யுண்டே க3த3ா கல்
கு3நு காமித ப2லத3ாயக
(கலிகி3)

அநுபல்லவி

கலிநி இங்கி3தமெருக3க நிந்
நாடு3கொண்டி
சலமுசேயக நர தலநு சக்கநி
வ்ராத (கலிகி3)

சரணம்

ப4ாக3வதா க்3ரேஸருலகு3
நாரத3 ப்ரஹ்லாத3 பராஶர
ராமத3ாஸுலு
ப3ாகு3க3 ஸ்ரீரகு4 ராமுநி பத3
முல ப4க்திஜேஸிந ரீதி த்யாக3
ராஜு நீகிபுடு3 (கலிகி3)

**முகாரி (4) ஆதி**

பல்லவி

காருபா3ரு ஸேயுவாருக3லரே
நீவலெ ஸாகேத நக3ரிநி
(காரு)

அநுபல்லவி

ஊரிவாரு தே3ஶஜநுலுவர
முநு லுப்பொங்கு3சுப4ாவு
குலய்யே (காரு)

சரணம்

நெலகு மூடு3வாந லகி2ல
வித்3யல நேர்பு கலிகி3 தீர்கா4
யுவு கலிகி3
சலமு க3ர்வ ரஹிதுலு
காலேத3ா ஸாது4 த்யாக3
ராஜ விநுத ராம ! (காரு)

# ஸ்ரீ புரந்தரதாஸர் கீர்த்தனைகள்



**ராகம் காம்போதி ஜம்பைதாளம்**

ப. ராமா எம்பு³வ எரடு³ அக்ஷரத³
மஹிமெயனு
பாமரரு தாவேனு பல்லரய்யா |

ச. 1. ரா யெந்த மாத்ர தொளு ரக்த
மாம்ஸ தொளித்த
ஆயஸ்தி²கதவாத அதி பாபவனு
மாயவனு மாடி³மஹராய
முக்திய கொடு³வ
தாயவனு வால்மீகி முனிராய
பல்ல |

2. மத்தே மா எந்தெனலு ஹொரா
பித்த பாபகளு
ஒத்தி ஒளபோக தந்தே
கவாடவாகி
சித்த காயக³ள பவித்ர
மாடு³வ பரிய
ப⁴க்த வர ஹனுமந்த
நொப்பதா பல்ல |

3. தரெயொளு ஈ நாமக்கே ஸரி
மிகிலு இல்லெந்து³
பரம வேத³களெல்ல பொகளு
திஹவு
ஸிரி யரஸ புரந்த³ர விட²லன
நாம வனு
ஸிரி காகி³யொளிப்ப சிவனுதா
பல்ல |

**ராகம் மோஹனம் ஜம்பை தாளம்**

ப. ஶரணு ஶரணு |

அ.ப. ஶரணு ஸக லோத்³த்⁴ர
அஸுர குல ஸம்ஹார
அரஸு த³ஶரத²பா³ல
ஜானகி லோல

ச. 1. ஈமுத்³து³ ஈமுக³வு ஈதனுவிந
காந்தி
ஈ பி³ல்லு ஈ பாண ஈ நீதி
ப⁴ாவ
ஈ தம்ம ஈ ஸீதே ஈ ப³ண்ட
ஈ பா⁴க்ய
ஆவ தே³வரி குண்டு பூ⁴லோக
தொ³ளகே³ |

2. உட்ட பிதாம் ப³ரவு உடி
கெ³ஜ்ஜே மாணிகவு
தொ³ட்³ட³ நவரத்ந ஸர கருண
விரலு
கொட்ட நம்பிகெ³தப்ப தந்த
ப³கு³த⁴ரி கெல்ல
ஸிருஷ்டி யொளெணெ காணே
கௌஸல்ய ராமா

3. பா³விஸலு அயோத்⁴யா
பட்டண நி³லி வாஸ
பேடி³ திஷ்டார்த்த³க³ளனு
கொடு³வெநெனு திரலு
ப⁴ாவ சுத்³தி⁴க³ளெல்ல தந்த
பகுதர பொரெவ
புரந்த³ரவிட²லநே ரெ⁴கு³ராமா
நிஸ்ஸீம ராமரா

ஸ்ரீராமஜயம்

# ஸ்ரீ ராமநாம கதாமாலை

## முன்னுரை

### ஸ்ரீ ராமநாமத்தின் பெருமை

ஸ்ரீ ராமபிரானுக்கு அர்ப்பணம் செய்யப்பெற்ற எந்தக் காரியமும் இனிது ஈடேறுவதும், ஸ்ரீ ராமபிரான் பெயரால் ஆரம்பிக்கப்பட்ட எந்த ஸ்தாபனமும் ஓங்கி விளங்குவதும், இடைவிடாமல் செய்யப்படும் ஸ்ரீ ராம நாம ஜபம் நிச்சயமாக வெற்றியையும் நன்மையையும் அளித்தலும் அனுபவத்தில் கண்ட உண்மைகள்.

எனவே, ஆஸ்திகர்கள் எல்லாரும் ஸ்ரீ ராம நாம ஜபம் செய்து பயனடையவேண்டும் என்பது எமது பேரவா. இந்த ஜபத்தைப் பின் வரும் வழிகளில் செய்யலாம்:—

1. ஸ்ரீ ராம நாமத்தை அடிக்கடி உச்சரித்தல்.

2. நன்கு பைண்டு செய்யப்பட்ட ஒரு நோட்டுப் புஸ்தகத்தில் அவகாசம் கிடைக்கும்போதெல்லாம் **ஸ்ரீராமஜயம்** என்று ஆயிரக்கணக்கில் எழுதி வருதல். (இவ்வாறு ஸ்ரீ காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளியிருக்கிறார்.)

3. சிறு காகிதங்களில் **ஸ்ரீராம** என்று அச்சிட்டு அவைகளை வீட்டின் முக்கியமான இடங்களில் ஒட்டிவைத்தல்.

4. எம்ப்ராய்டரி வேலை தெரிந்த பெண்மணிகள் நல்ல விஷயங்கட்கு உபயோகமாகும் துணிகள்மீது 'ராம ராம' என்றோ 'ஸ்ரீராமோஜயதி' என்றோ 'ஸ்ரீராமஜயம்' என்றோ நூலால் தைத்து உபயோகித்தல்.

5. இப்புத்தகத்தில் வேறு இடத்தில் கொடுக்கப்பட்டுள்ள நாமாவளிகளைப் படித்து நல்ல புஷ்பங்களைக் கொண்டு சக்கரவர்த்தித் திருமகன் படத்திற்கு அர்ச்சனை செய்தல்.

6. அஷ்டோத்தர ஶதநாம ஸ்தோத்ரம், ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், கவசங்கள் அல்லது ஸ்ரீ ராமபிரான் புகழ் பாடும் வேறு ஸ்தோத்ரங்கள் முதலியவைகளைப் பாராயணம் செய்தல்.

7. இவைகளைத் தவிர அநுதினமும் தவறாமல் பக்தியுடனும், உருக்கத்துடனும் ஸ்ரீமத் ராமாயண பாராயணம் செய்து வருதல். (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், கம்பராமாயணம், துளஸீதாஸரின் ஸ்ரீ ராம சரித மானஸம் என்னும் ராமாயணம் ஆகியவைகளைப் பாராயணம் செய்யலாம். அல்லது அவரவர் தாய்மொழியினால் உரைநடையில் எழுதப்பட்ட ஸ்ரீ ராம கதையையும் பாராயணம் செய்யலாம். எவ்வகையில் செய்தாலும் பலன் உண்டு.)

8. தினமும் சிலமுறை ஸ்ரீ ராம நாமம் எழுதிய பிறகே உண்பது என வழக்கப்படுத்திக் கொள்ளுதல்.

9. சில குடும்பத்தினர் தங்களுடைய குழந்தைகள் எல்லோருக்கும் "ராமன்" என்னும் பெயர் சேர்ந்து வரும்படிப் பின்வருமாறு பெயரிடுவதும் வழக்கம்:

| | | |
|---|---|---|
| அச்சுதராமன் | ரகுராமன் | ஸாகேதராமன் |
| அநந்தராமன் | வேங்கடராமன் | அயோத்யாராமன் |
| ஆநந்தராமன் | மோஹனராமன் | ஸுந்தரராமன் |
| பலராமன் | ஜயராமன் | பட்டாபிராமன் |
| தசரதராமன் | விஜயராமன் | கோதண்டராமன் |
| | | முதலியன |

10. மேற்படி ஒன்பது வகைகளில் ஸ்ரீ ராம பக்தியை வெளியிடுவதன்றி ஸ்ரீ ராம பக்தர்கள் தங்கள் சொந்த முயற்சியாலே, நம் நாட்டிற்கும், வீட்டிற்கும் ஸத்விஷயங்கட்கும் பெருமை தேடித்தந்த ஸ்ரீ ராம கதையைக் குழந்தைகட்குச் சுருக்கமாகவும், உருக்கமாகவும் தாமே எழுதியும், சொல்லியும் தருவது நலம்.

11. தவிர, ஸ்ரீமத் ராமாயணத்தின் ஸாரமே "சரணாகதித் தத்துவம்". ஆதலால் இதைப் படிப்பவன் வாயிலாகச் சக்கரவர்த்தித் திருமகன் திருவடிகளைத் துணையாகப் பெறலாம். இதற்கு உதாரணமாக எமக்கு வேண்டிய சிறந்த பக்தர் ஒருவர் தானமாகத் தந்த 1008 நாமாவளிகளைக் கீழே தந்துள்ளோம்.

---

## பால காண்டம்

கோசலை குமரா ராமா சரணம்
குற்றமில் மனங்கொள்
கோசலம் ஆண்ட
குவலயம் போற்றும்
தசரதன் மதலாய்
தாரணி தாங்கிய
நிசரதக் கணைகொள்
நிறைகுணசீலா 8
சித்திரைப் பிறந்த
புனர்வசு வாய்ந்த
பக்தியிற் றோன்றிய
நவமியில் உதித்த
கடகஞ் சேர்ந்த
கருமா ணிக்கமே
விடையென நிமிரும்
வில்லவ வானவ 16
பரதன்முன் பிறந்த
பக்தருக் கருளும்
சரத மெய்ப்பொருள்
சான்றவர் சான்றவ
சத்துருக் கன்மகிழ்
சதுமறை போற்றிய
முத்தரும் உவக்கும்
மூவுல களிக்கும் 24
இலக்குவன் தமையா
யாவரும் விரும்பும்
கலக்கமில் அருட்கொடை
கண்டகந் நெருப்பே
வேள்வியால் தோன்றிய
பாயச ரூபா
கொள்வினை யறுத்த
குற்றம் அற்றவ 32
கருணா கரனே
களிப்புக் கடலே
மருத்துவ ! மருந்தே
அருளெனும் அன்பே
வேத வித்தக
விற்பணி பூண்ட
வேதனும் அறியா
வசிட்டரைப் பணியும் 40

நற்குணக் குன்றே ராமா சரணம்
நளின லோசன
அற்புத இளைஞனே
அச்யுதானந்தனே
கோசிகன் வேண்டிய
குருசொற் கொண்ட
தேசிக உருவுடை
செம்பொருள் வல்ல 48
இளையவன் பிரியா
இலக்குவன் தொடர்ந்த
பலையதி பலைகொள்
பசிப்பிணி யகன்ற
காமாச் சிரமஞ்சேர்
காமம் வென்ற
ராமா சாந்த
ரவிகுல தீப 56
தாடகை யழித்த
தருமம் போற்றும்
ஆடவர்க் காடவ
ஐவரை அடக்கிய
சித்தாச் சிரமஞ்சேர்
சித்தரைக் காக்கும்
வித்தா கியஸ்ரீ
வேள்வி காத்த 64
சுபாகுவைத் தொலைத்த
சுலோசன ! கோசல
சுபாகு நீண்ட
சுந்தரத் தோளாய்
மாரீ சனைவெல்
மலையென நிமிர்ந்த
பேரீ சனையெம்
பெரும்பு கவர்தாழ் 72
கோசிகன் மகிழ்ந்த
கோவே தேவே
ஆசுகம் பலகொள்
அகல்யோத் தாரண
கோதமன் பூசைசெய்
கோதறு கொழுந்தே
வேதனை நீக்கிய
விண்ணவர் பேறே 80

மிதிலை யடைந்த ராமா சரணம்
விதேகன் எதிர்கொள்
கதியிலேன் எனையாள்
கௌசிகன் ஏவிய
சிவன்வில் லறுத்த
சீதையைக் கண்ட
அவள்மனங் கவர்ந்த
அவனியில் உத்தம 88

சீதைகைத் தலமணி ராமா சரணம்
சீர்மிகு சீதா
சீதா ரஞ்சன
திருவுடைத் தசரத
பரசுரா மனைவெல்
பரம பவித்ரா
விரசுகோ லங்கொள்
முரசொலி அயோத்தி 96

## அயோத்தியா காண்டம்

அயோத்தியி லுறைந்த
அரசர் புகழ்ந்திடும்
பயோததித் துயிலும்
பாரோர் புகழும்
தந்தைதாய்ப் பேணும்
தாரத் துடன்வாழ்
பந்தனை நீக்கும்
விற்கை வீரா 104

கற்றவர் போற்றும்
கவுத்துவ மணிந்த
அற்றவர் வாழ்வே
அருங்குணக் கடலே
வலிமையிற் சிறந்த
வலிமையில் லோர்க்கருள்
எளிமையின் எளிய
எழில்மிகு உருவ 112

பொறுமையைப் போற்றும்
புண்ணிய புருஷா
சிறுமையைக் கடியும்
திருவுறப் பேசும்
புத்தியிற் சிறந்த
பொருளறி புராண
புத்திர மணியே
பொள்ளலில் முத்தே 120

வந்திப் பவர்க்கருள்
வைதார்க்கும் அருள்
முந்திப் பேசும்
மோகன உருவ
மறையவர் வாழ்த்தும்
மனத்துக் கினிய
குறைதீர் குருவே
குணப்பெருங் கடலே 128

தனக்கென வாழா
தானவர் அழித்த
வினைத்தொகை யொழிக்கும்
வேத விளக்கே
அன்பரை ஆளும்
ஆபத் பாந்தவா
துன்பம் தொலைக்கும்
தோம்பல துடைக்கும் 136

நூல்பல கற்ற
நுவலரும் நுண்ணிய
நால்வே தம்புகழ்
நன்னெறி வளர்க்கும்
நீதியை யுணர்ந்த
அநீதியை அழிக்கும்
சோதி மதிமுக
சுரர்குரு நிகர்மதி 144

இந்திரன் வலிமைகொள்
ரவிகுல திலகா
கந்தர்வ எழிலுடை
ககுத்தன் வழிவரு
தசரதப் பிரிய
தனயரு ளுயர்ந்த
கசரதம் ஊர்ந்த
கடிநகர் வலஞ்செய் 152

இளைய அரசே
இனியன கூறும்
இளையவன் பணிகொள்
இடும்பையைத் தொலைக்கும்
விரதம் நோற்ற
வேத்தியற் கியைந்த
சுரர்தம் வரத
சுமந்திரன் அழைத்த 160

மந்தரை பகைகொள்
மாற்றாந் தாய்மகிழ்
அந்தரத் தவர்க்கருள்
அத்தாய் அழைத்த
தாயை வணங்கிய
தந்தையைப் பணிந்த
தாய்மொழி போற்றிய
தந்தைசொற் காத்த 168

செந்தா மரைமுக
செங்கதிர் நிகர்த்த
எந்தாய் ஜானகி
சொன்னசொல் தவறு
மெய்யே வழியெனும்
பொய்யை அழிக்கும்
வெய்யவன் குலமணி
வினயம் மிகுத்த 176

இலக்குவன் சார்ந்த ராமா சரணம்
அவன்சினம் தணித்த
இலக்குவ னுடன்செல்
இன்முகம் கொண்ட
பெற்ற தாய்ப்பணி
தீரயைத் தேற்றிய
கற்ற கோஸல
கடிதின் விடைகொள் 184

சுமித்திரை யைப்பணி
சோகம் நீக்கிய
பகலோன் மரபுவந்த
பண்பு மிகுத்த
கானகம் செல்லும்
கதிரவன் கதிரவ
சானகி யுடன்செல்
சற்குணத் தசரத 192

தீக்குமொரு தீயே
செல்வர் செல்வமே
கீர்த்திச் சிகரமே
கிளரொளிச் செல்வா
தேவர் தேவ
வீரர் வீர
தேவர்க் கரிய
முனிவர்க் கெளிய 200

உயிர்களுக் குயிரே
ஊர்விட் டகன்ற
வெயிலொளி கரக்கும்
வளநாடு நீங்கிய
நாட்டவர் தொடர்ந்த
நன்மர வுரியணி
வேட்டவர்க் கருளும்
வினைகள் அறுக்கும் 208

கங்கையை மேவிய
கமலக் கண்ணா
கங்கையி லாடிய
கருமுகில் வண்ணா
உணர்வுடை யோர்உணர்
உன்றன் அடியே
குணங்கெழு கொழுந்தே
கோதறு பொன்னே 216

குகன்வர வுணர்ந்த
குகன்அமு துண்ட
குகனைத் தழுவிய
குகனொடும் ஐவராம்
படகில் ஏறிய
பகீரதி கடந்த
துடியிடை தொடர்ந்த
தூநெறிச் சென்ற 224

பரத்துவன் புரைசேர்
பவநோய் மருந்தே
மருத்துவன் அனையாய் ராமா சரணம்
மறைமுனி வரர்பணி
சித்திர கூடஞ்சேர்
செல்லுஞ் சொல்வல
சித்திர வில்கொளும்
செய்தவச் செல்வ 232

காய்கனி யுண்ட
கைதவம் அழிக்கும்
மாயம் நீங்கிய
மாதவ ! ஆதவ !
தம்பியைத் தேற்றிய
தருமமே பொருளெனும்
தும்பியை நிகர்த்த
தூய அருளுடை 240

படையொலி கேட்ட
பரதன் வரவறி
இடர்க்கடல் கடந்த
இலக்குவன் சினந்தணி
பரதனைத் தழுவிய
பரிந்தறம் விளக்கிய
விரதம் தவறு
வீரா வேதியா 248

சத்துருக் கன்பணி
தரும மூர்த்தி
மெய்த்திரு அளிக்கும்
மேதகு நீதியோய்
தந்தையின் பிரிவறிந்த
தரையில் விழுந்த
அந்தோ வெனவழுத
அருங்கடன் இறுத்த 256

இலக்குவற் கிரங்கிய
ஒன்றுணைக் குணர்த்திய
விலக்கரும் வலியுடை
விதிவலி தென்னும்
பரதற் குறுதிசொல்
பாரிற் புகழ்பெறு
பரதனைப் புகழ்ந்த
அறமுரு வெடுத்த 264

ஜாபாலியைக் கடிந்த
ஜகத்தைக் காத்திடு
பூபாலர் ஏறே
புண்ணிய மூர்த்தி
வசிட்டனுக் குரைசொல்
வரமுனி யரசே
விசிட்டரை ஆளும்
விழுப்பொருள் தேர்ந்த 272

பரதன் இரந்த
திருவடி யீந்த
படித்தலத் துயர்ந்த
பாதுகைக் கரசளி

ஈன்றவர்ப் பணிந்த ராம சரணம்
செவ்வழி யறிந்த
ஆன்றவர் போற்றிய
தென்றிசைச் சென்ற 280

முண்டக நேத்ரா ராம சரணம்
முனிகண ரக்ஷக
தண்டக வனஞ்செல்
தபோதன வேஷா

## ஆரண்ய காண்டம்

அரண்ய வாசா
அத்திரி விருந்தே
சரண்ய ! சற்குண !
ஸரஸிஜ நேத்ரா 288

நந்தா விளக்கே
நாயக மணியே
தந்தாய் முத்தி
தயாளா ! தாயே
பேதியா துநிமிர்
பிறழா உருவ
ஓதியுண ரத்தகு
ஒள்ளிய ! தெள்ளிய ! 296

அத்திரிக் கருளிய
தண்டகம் புகுந்த
சித்திரக் குனிசிலை
சீர்த்தவ ! பார்த்திவ
விராதனை வதைத்த
வேதம் புகழும்
பராபர வீர
தத்துவ மூர்த்தி 304

ஆதிப் பரமா
அமுதச் சுவையே
நீதி உருவே
நிறைமதிப் பேறே
திருவுறை மார்பா
திருவடி யருள்வாய்
அருமறை வேதியா
அறுத்திடு தீதெலாம். 312

விராத விமோசக
வைகலும் அருள்செய்
விரோத மகற்றிய
விரும்பினர்க்கு அளிக்கும்
வேதம் புகலும்
உலகெ லாம்புகழ்
பாதம் அருளும்
பூதந் தொறுமுறை 320

தனிநின்ற தத்துவ
தகையுருக் கொண்ட
இனிக்கும் பெயருடை
எப்பொரு ளுந்தரு
அரவாய்ச் சுமக்கும்
அயிலெயிற்று ஏந்துவாய்
ஒருவாய் விழுங்குதி
ஓரடி அளந்தோய் 328

ஸர்வ மங்கள
சரபங் கரைப்பணி
பருவ முகிலே
பயனே பண்பே
மூவா முதலே
மூத்த பொருளே
தேவரைக் காக்கும்
தீவினை தீர்த்த 336

உலவாப் பொருளே
ஒன்றே உணர்வே
பலவாய் விளங்கும்
பற்றுக் கோடே
முதலே ஈறே
முன்னே பின்னே
முதலீறு அற்றாய்
முன்னிடத் தோன்றும் 344

நல்லாரைக் காத்தருள்
நவைதீர் சுகுண
அல்லோரைக் காய்ந்த
ஆழி கடைந்த
இருளும் நீயே
வெளியும் நீயே
உருவும் நீயே
அருவும் நீயே 352

அஞ்சுவார் துணையே
அபயம் அளித்த
அஞ்சுமான் வழிவரு
அருங்கான் மகிழ்ந்த
சுடர்விடு மேனி
சுதீக்ஷ்ண பூஜித
அவர்தவம் ஏற்ற
அடல்தனு ஏந்திய 360

குறுமுனி குடில்சேர்
நெடியவ கரியவ
வறியவர் நிதியே
வானவர் வழிபடும்
சார்ங்கம் பெற்ற
வடிகணை பலகொள்
அத்திரம் பெற்ற
அதிதியாய் நின்ற 368

வனைகழல் வரிசிலை
வினையறு நோன்புகொள்
புனைசடை முடியுடை
புலவ விமல

கருமலை யனைய ராமா சரணம்
திருமகிழ் மார்பின்
அருமைக் குணத்து
அலகிலா அழகுடை 376

சதுமறை நேடிய
சடாயுவைக் கண்ட
தாதையாய்க் கொண்ட
தன்னிழற் கீழ்செல்
கோதாவரி மேவிய
கோமகன் மகனே
சீதா காந்தா
சிந்தையால் தூய 384

போதக கமனு
புரையில் மணியே
ஓதிம நடையவள்
உத்தம குணத்தாய்
பஞ்ச வடியடை
பனிதரு படிவ
தஞ்சமென் றவர்க்கருள்
தம்பிசெய் சாலைவாழ் 392

சூர்ப்ப ணகைகாண்
சுந்தர வதன
துஷ்டரைக் கடியும்
சுரர்வாழ் வளித்த
அரக்கி விரும்பிய
அவட்கூறி வுறுத்திய
தருக்குறி தரச்செய்
தவம்செய் தவமே 400

மூக்கறு படச்செய்
மொய்ம்புடைத் தோளா
தீக்கணக் கணையுடை
திரிசிரனைத் தொலைத்த
கரனைக் கடிந்த
தூடணனைத் தொலைத்த
உரன்மிகு உரவோய்
அரக்கரை அழித்த 408

அகம்பன னைத்தவிர்
அரியவ பெரியவ
பகவ ஈச
பார்த்தவர் வியக்கும்
வஞ்சிபயம் போக்கிய
வரதா வீரா
நெஞ்சிற் குடிகொள்
நேரிழை மகிழ்செய் 416

ஆழியா அனந்தா
ஆருயிர் அளிக்கும்
பாழிய பணைத்தோள்
பார்முதற் படைத்த
மூவர் முதல்வா
வானவர் வாழ்வருள்

எவர்க்கும் அரியோய் ராமா சரணம்
எவரு மறியா 424

வற்கலை யுடுத்த
வார்கழல் வனைந்த
விற்கலை வேதியா
மறையுரை நாவா
அழகா குழகா
அரக்கியும் புகழ்ந்த
மழவிளங் காளாய்
மன்னவன் மைந்த 432

மாரீச னுணர்ந்த
மாயமான் தொடர்ந்த
மாரீ சாந்தக
மானிட இயல்புகொள்
அறமே துணையெனும்
ஆபத் பாந்தவ
மறத்தினை யறுக்கும்
மதகளி றெனவரு 440

அணங்கினை யிழந்த
ஆருத் துயருறு
வனங்களில் தேடிய
மனமிகத் துடித்த
சடுதியில் தொடர்ந்த
சடாயுவைக் கண்ட
சுடுதீ யெனச்சினந்த
சூரியன் எனப்பொலி 448

இராவணன் செயலறி
இயம்பருஞ் சினங்கொள்
சராசரம் அஞ்சிய
சடாயுவுக்கு வீடளித்த
அடர்ந்தகா னடைந்த
அயோமுகி கண்ட
அடல்அரக் கியைக்கொல்
அறப்பய னேஎனும் 456

எய்யுஞ் சிலைக்கை
இளையவன் நேற்றும்
மொய்ம்புடன் முடுகிய
மோஹன முதல்வா
கவந்தனைக் கண்ட
கைகளை வெட்டிய
அவந்தனை அழித்த
ஆதி மூலமே 464

ஆதிப் பிரமனே
ஆதிப் பரமா
ஓதி உறுபொருள்
சோதிச் சுடரே
எப்பொருளும் ஒன்றாய்
இயலறச் சான்றே
முப்பொருள் முளையே
மூலமில் முதல்வா 472

உண்பவன் நீயே ராமா சரணம்
ஊட்டுவான் நீயே
பண்புன தறியேன்
பகர்வாய் அவையவை
தனுச்சொல் வழிச்செல்
தன்னையே உணராய்
மனுவழி வந்தாய்
மதங்கர் குடிலடை 480

சபரியைக் கண்ட ராமா சரணம்
சபரியின் கனியுண்
சபரிவாய் நெறிகேள்
அவட்குவீ டளித்த
கம்புக் கிரீவ
கட்டிய வரிசிலை
பம்பை புக்க

## கிஷ்கிந்தா காண்டம்

இறைவனும் நீயே 488

இன்பமும் நீயே
காரணம் நீயே
கற்பகம் நீயே
கவளமா தங்க
கங்குலும் உறங்கா
பம்பையிற் படிந்த
பதும முகமலர்
போதக நடையுடை 496

பொன்ருப் புகழ்பெறு
வானரர் கண்ட
அனுமன் ஆய்ந்த
வானரர்க்கு வாக்களி
அவர்க்குறு நண்ப
எரிகரியா நட்ட
எறுழ்வலி படைத்த
அரிகுறை கேட்ட 504

அக்குறை தீர்த்திடு
மராமரம் எய்த
மணியணி கண்ட
பராவரும் பெருமைய
பார்த்திவ குமரா
வாலியை வதைத்த
அவன்மகன் காத்த
அறிவெனப் புகழுறு 512

மூவுலக முதலே
மூலமந் திரப்பொருள்

காசினிப் புண்ணியா
செம்மைசேர் நாமா
தாயும் நீயே
தந்தையும் நீயே
உறவும் நீயே
உற்றதும் நீயே 520

ஆறும் நீயே
அறமும் நீயே
துணைவனும் நீயே
துய்யனும் நீயே
கவிமேற் சினங்கொள்
இளையவன் விடுத்த
கவிமன் பணிவறி
கடுஞ்சினந் தீர்ந்த 528

சேனையைக் கண்ட
அதன்வலி யறிந்த
தானைமன் போற்றிய
தன்மனம் மகிழ்ந்த
சீதையைத் தேடிய
வானரர் விடுத்த
திசைதொறும் விடுத்த
மாருதிக்கு மறைசொல் 536

அங்குலி அனுப்பிய
சம்பாதிக் கிறகளி
நம்பா ! நவைதீர்
சேவடி சிவந்த

## ஸுந்தர காண்டம்

கைவில் லேந்தும்
கார்நிற வண்ணு
பொய்யில் புகழோய்
புலவர் வாழ்வே 544

மாருதி வணங்கிய
மங்கள குணகண
மேருத் தோளுடை
மேதகு சிறப்புடை

கடலுள் அமுதே
அமுதின் சுவையே
சுவையின் பயனே
அனைத்தும் ஆனவ 552

திரிசடைக் கனவரு
சயந்தனுக் கருள்புரி
நயந்தரு சொல்லாய்
நாயகி உளமுறு

பங்கயப் பாதா ராமா சரணம்
பவள வாயா
திங்க ளெனும்உகிர்
உலகளக் கும்மடி 560

பச்சைமா மலையே
பணைக்கை வீர
அச்சுதா அமரா
அழகிய தந்தா
சூடையின் மணிபெறு
கண்மணி யெனநினை
நீடு நினைந்திடு
நேசருக் குரைத்த 568

மாருதி யைப்புகழ்
மாதின் நிலையறி

மாமழைக் குழலுடை ராமா சரணம்
மதகளி றெனவரு
சீதை பெருமைகேள்
செய்வதும் அறிந்த
மாதை மீட்கச்செல்
விற்பெருந் தோளுடை 576

நீலனை நோக்கிய
நெடியவ சுந்தர
காலனைக் கடக்கும்
கண்டவர் வணங்கிடும்
அனுமன்மேல் தோன்றும்
விரைவினிற் சென்ற
அனுமனை ஆட்கொள்
தென்றிசைப் பரவைகாண் 584

## யுத்த காண்டம்

ஒன்றே யாகிய 592

பலவே யாகிய
அன்றே யாகிய
அனைத்தும் ஆகிய
ஊழியின் உலையா
உத்தம வித்தக
வாழி வாழி
கடற்கரை யடைந்த
மாயா மங்கள 600

வானவர் ஏறே
காயா நிறத்த
கங்குலும் உறங்கா
முழுப்பெரு முதலே
முந்தையோர் புகழும்
எழிற்பெரு நிதியே
எந்தையே ராகவ
ஆயிர மறைப்பொருள் 608

அறிந்தவர் அறிவே
தீவினை யறுத்திடு
தெய்வக் கொழுந்தே
வேதம் நண்ணிய
வீடணன் போற்றிய
வேதமும் காணு
விரிஞ்சன் தலைவா
என்றும் உள்ளாய் 616

இறைவா இறைவா
பொன்றுதல் இல்லா
புராண புருஷா
வேத முதலே
மெய்ப்பொருள் வடிவே
வேத முடிவே
விந்தையின் வந்த

ஓங்கார உருவே 624

ஓம்நமோ நாரணு
ஓங்காரப் பொருளே
ஓங்கும் பெருமைய
நந்தலில் தெய்வ
நான்மறை யவாவிய
அந்தமில் இன்ப
அற்புத மாயா
அராவணை அமலா 632

அளவையின் அறியா
சராசரஞ் சமைத்த
தரும மூர்த்தி
கண்ணினுட் கரந்த
காலம் வென்ற
எண்ணினும் நெடியவ
இந்தியம் தொறுமுறை
முக்குணம் அற்ற 640

மூவுருக் கொண்ட
மூவுல காளி
மூவுல குண்ட
சாணினும் உள்ள
அணுவினும் உள்ள
தூணினும் உள்ள
சொல்லினும் உள்ள
தன்னைப் படைத்த 648

தானே யாகிய
என்னைப் படைத்த
எல்லாம் ஒறுக்கும்
அகரப் பொருளே
அழிவில் மூர்த்தி
ஸகரன் வழிவரு
சுருதிப் பொருளே
சோதி முதலே 656

ருதுவும் நீயே ராமா சரணம்
தண்மையும் நீயே
வெப்பமும் நீயே
மாருதி சொற்கேள்
மற்றவனைப்புகழ்
கருது பொருளறி
காலமுணரும்
அபயம் அளிக்கும் 664

அளவைக் கமையா
உபய மலரடி
உலகத் துயிரே
விளைவெலாம் அறிவாய்
வீடணற் காத்த
தளையெலாம் அறுப்பாய்
தனிமுதலொருவ
தேடுவார் தேடும் 672

திசையெலாம் புகழ்கொள்
கூடுவார் நிழலே
குன்றுபோல் உருவ
இலங்கை யரண்கேள்
இராவணன் வலியறி
அவனழி வெண்ணிய
அறமுயர்ந் ததெனும்
வருணனை வழிகேள் 680

வாராமை சினந்த
வல்வில் எடுத்த
வருணனுக் களிசெய்
ஆழிநீ அனலும்நீ
அல்லவை யெலாநீ
ஊழிநீ உலகும்நீ
உயிரும்நீ உடலும்நீ
காட்டுவாய் உலகம் 696

காப்பாய் அவற்றை
ஊட்டுவாய் நீயே
உண்பாய் நீயே
சோதி வள்ளல்
மறையின் வாழ்வே
சாரசர முதலே
தராதலம் காக்கும்
அன்னை நீயே 704

அத்தனும் நீயே
உன்னையே உணராய்
எங்ஙனம் உணர்வேன்
ஆயிரம் பேருடை
அண்டம் உண்டவ
பாயிருள் போக்கும்
பரிதிக்கு ஒளிதரு
இளையவன் தேற்றிய 712

இருகைக் களிறே
நளன்வரு கென்ற
நன்றவன் செயலெனும் ராமா சரணம்
கடல்பந் தனைசெய்
கருதருஞ் சேது
அடல்மிகு தசரத
அமரர் ஆசிகொள்
கருங்கடல் கடந்த 720

கருணைக் கடலே
பெருங்கடற் சேனை
பேரறி வாள
ஒற்றர் வரவறி
ஓவிய உருவ
ஒற்றர்க்கு உயிரளி
உள்ளுவ நல்கும்
தன்பலம் அறிவித்த 728

தன்படை காட்டிய
தன்னரு ளளிக்கும்
ஆண்டவ புராதன
சுவேலம் ஏறிய
சூழ்கவிப் படையாய்
சுவேலம் உச்சிநில்
தூயமா டங்காண்
இலங்கை கண்ட 736

இளவற்குக் காட்டிய
இலங்கையை வியந்த
இளவற் குரைத்த
இராவணன் கண்ட
ஆரண உட்பொருள்
பராபர தத்துவ
மாமறை நேடிய
கவிவரன் வலிகாண் 744

அரக்கன் முடிகொள்
பூசுரர் தெய்வமே
புவனங் களிசெய்
வடவா யிலில்நில்
வாநரர் மகிழ்செய்
அடக்குவா யரக்கரை
அங்கதன் தூதுசெய்
அரக்கர் அஞ்சிடு 752

அணிவகுத் துயர்ந்த
அரக்கர்பால் அம்பெய்
அமரிலற் புதஞ்செய்
அகழியைத் தூர்த்த
அருநகர் வளைத்த
பகழி யெய்த
பாய்மத யானைகொல்
நிருதனை வென்ற 760

நிராயுதன் ஆக்கிய
அரக்கனை வென்றாய்
அவன்புறங் கண்ட
மார்பினை மடித்த

தோளினைத் தொலைத்த ராமா சரணம்
நாவினை அறுத்த
நனிமுடி பறித்த
தெய்வவாள் பொடித்த 768

திறமுங் கெடுத்த
உய்ந்திட உரைத்த
உலக முதல்வ
கும்பகன் னனைக்காண்
கோதிலான் சரிதைகேள்
இம்ப ருயவுரை
இன்மொழி கேட்டயர்
அவனுயிர் போக்கிய 776

அவனுக் கிரங்கிய
அவன்வரம் மதித்த
அதிகா யனையழி
அல்லிலும் அமர்புரி
இராவணி மாயைசூழ்
நாகபா சஞ்சூழ்
தேவாதி தேவா
திருவினைப் பிரியா 784

மூலமில் முதல்வா
இடையீ றில்லாய்
ஊனுய் நின்ற
உயிர்க்குயி ராகிய
அரணுய் நின்ற
அந்தமி யானே
சொல்லாய் நின்ருய்
பொருளாய் வளர்ந்தாய் 792

வில்லொன் றெடுத்தாய்
சரமொன் றெய்தாய்
மறந்தாய் போன்ருய்
மறவா தவனே
துறந்தார் ஒத்தவ
துறவா தவனே
பிறந்தாய் போன்ற
பிறவா தவனே 800

அறந்தான் நிறுத்த
அதீத மாயா
கருடா லிங்கன
கவிக்குலம் மகிழ்ச்செய்
கருடவந் தனங்கொள்
கார்முக வீர
நாகங் கெடுத்த
பெரும்பக் கனையொழி 808

தூம்ரா க்ஷாந்தக
மகரா க்ஷாந்தக
அகம்பனன் போர்காண்
அநுமனைப் புகழ்ந்த
மகோதரன் புறங்காண்
மாயா விநோத

நான்முகன் கணைகான் ராமா சரணம்
ஞாலங் காக்கும் 816

கான்மகன் ஜபிக்கும்
மருத்தினு லுயிர்த்த
தம்பியைத் தழுவிய
தகுவன்வஞ் சகமறி
வெம்படை தொடுத்த
மேதினி காத்த
நிகும்பலைச் செயல்கேள்
நேருனக் கில்லாய் 824

இளவற்குப் படையளி
இனிய வுரைசொல்
வேள்வியை அழித்திடு
விதிர்ப்புறப் பகையழி
அநுமன் போற்றும்
இளையோன் ஏத்தும்
மறைகள் தேறும்
வேதியர் வணங்கும் 832

அறிஞர் செல்வமே
நல்லற மூர்த்தி
உண்மைக் கொருவனே
தசரதன் புதல்வா
திண்மையில் நிகரில்
தேவர் குறைதீர்
இராவணி யழிவுகாண்
இமையவர் மகிழ்செய் 840

இணையில் வலியோய்
இடும்பை தீர்த்திடு
மூலப் படைகாண்
கவிக்குல பயந்தீர்
மூலப் படையழி
மூவருள் ஒப்பிலா
கந்தர்ப்பக் கணைதொடு
கடுஞ்சமர்க் கொருவ 848

வானோர் வியக்கும்
பகைவரை யழித்திடு
மகோதர னைக்கொல்
மகாபார் சுவனழி
இளவலைப் போற்றிய
இன்குணம் நிறைந்திடு
தம்பிமேல் வேல்காண்
தவித்துப் புலம்பிய 856

மலையால் துயர்தீர்
வண்மைக் கொருநிதி
நிருதனைத் தேரிற்காண்
நிறைபோர் தொடங்கிய
கருவினை புரைகணை
கதியிலார் கதியே
மாதலி வரவுணர்
மாதிரத் தேரடை 864

சாதல் பகைக்கருள் ராமா சரணம்
சமர்க்களந் திரா
நீசன்வில் லறுந்த
வானவர் போற்றிய
நீசன்தேர் உடைத்த
வில்லின் செல்வா
குடமுனி யைத்தாழ்
இரவியந் திரங்கொள் 872

குடமுனி யருள்பெறு
கதிரவன் அருள்பெறு
அளப்பருங் குணக்கடல்
பவள வாயா
அரக்கன் தலைகொய்
ஆயிரந் தலைகாண்
பிரமன் கணையெய்
பேருரம் படவெய் 880

இராவண வதஞ்செய்
இராக்கதர் இரித்த
அராவணைச் செல்வா
அருந்தவர் பெருந்தவ
அனைத்தும் ஆன
அகிலம் காத்த
வினைத்தொகை நீக்கிய
வில்லொடும் விளங்கிய 888

கருமுகிற் கொழுந்தே
காரணப் பொருளே
திருவொடும் பொலிந்த
தேர்ந்தவர் நாடும்
நாடிய பொருள் தரும்
ஞானம் அளிக்கும்
நீடிய புகழ்சால்
நெடிய தோளுடை 896

உலகம் ஆக்கிய
அதைநிலை பெறுத்திய
அலகில் லீலைசெய்
தலைவா சரணம்
மரகத மலையே
மலரினில் மணமே
பரகதி யளிக்கும்
பண்ணுள் நின்ற 904

அரசன் திருமகன்
அனைவரும் போற்றும்
கரைசெய லரிய
கண்ணே யமிழ்தே
வீடணன் நயந்த
விலங்கல் தோளுடை
வீடணற்கு அரசளி
வெற்றி வீர 912

பச்சிலை வண்ணா
கைச்சிலை யேந்திய
கண்ணா கண்ணா ராமா சரணம்
சீதையை அழைத்த
சிந்தை கலக்கிய
மாதைக் கைவிடு
அவளெரி முழுகச்செய்
அங்கியின் துயர்கேள் 920

அருங்கற்புக் காட்டிய
மங்கலில் அன்புகொள்
மாருதி விநயங்கொள்
சதுமுகன் புகழ்ந்த
திருமகள் கேள்வ
விதிமுறை யறிந்த
தேவியை ஏற்ற
மனிதன் எனவரு 928

மறையின் துணிவே
கனகனைக் கறுத்த
கனியே காளாய்
பகுதி நீயே
பழமை நீயே
விகுதி நீயே
விளைவும் நீயே
பரமும் நீயே 936

பரம்பொருள் நீயே
வரமும் நீயே
வாழ்வும் நீயே
ஐயைந் தாகிய
அருந்தத் துவமே
வையம் காத்த
வான்பொருள் வைப்பே
தோற்றம் இலாத 944

தோன்றும் பொருள்நீ
காற்றும் நீயே
கனலும் நீயே
நீரும் நீயே
நிலமும் நீயே
வேரும் நீயே
விதையும் நீயே
இருவினை துடைக்கும் 952

இருண்மலம் அறுக்கும்
கருவினை யறுக்கும்
கருத்த ரகுகுல
நீத்தநின் தந்தைகாண்
நெடுந்தாள் மிசைபணி
அவனகம் மகிழ்செய்
அவன்மார் பணைந்த
தந்தைபால் வரங்கொள் 960

தாய்ப்பழி யழித்த
பரதன் பழிதீர்
அம்புய முகமலர்
பரதனை நினைத்த

அவன்துயர் நின்ந்துகு ராமா சரணம்
அயோத்தி விரைந்துசெல்
புஷ்பக மேறிய
பொற்பமை மனேத்துணே 968

மனேக்கணே காட்டிய
தரங்கம் கடந்த
தமிழ்முனி குடில்காண்
கிட்கிந்தை கண்ட
கோதா வரிசேர்
பரத்துவன் குடில்காண்
பரதன தியல்புகேள்
அநுமனே முன்விடு 976

அநுசனுக் கிரங்கிய
அருங்குகன் கண்ட
பரதனேத் தழுவிய
பக்தனேத் தழுவிய
விரதனேத் தழுவிய
தம்பியைத் தழுவிய
தாயரை வணங்கிய
சத்துருக் கன்தொழும் 984

தூயரை வணங்கிய
குருவினே வணங்கிய
பாதுகை பெற்ற ராமா சரணம்
சடையை நீக்கிய
மஞ்சனம் கொண்ட
ஊர்புகும் விரா
அரண்மனேப் புகுந்த
செங்கண் மாலே 992

அநுமன் தாங்கணே
அங்கதன் ஏந்துவாள்
பரதன் கவிகுடை
இருவர்வீசு கவரி
திருவொடும் பொலிந்த
திருநகர்ச் செல்வா
அரியா சனஞ்சேர்
அனேத்தும் ஆண்ட 1000

கேசவ நாரண
மாதவ கோவிந்த
விண்டுமது சூதன
நெடியவ வாமன
சீதர பூதர
இருடி கேச
பத்ம னப
தாமோ தரனே 1008

குறிப்பு :—இந்த ராமகதாமாலேயைப் போலவே ஒவ்வொருவரும் எழுதிப் பழகிக்கொள்ளலாம். தவிர, தம் குழந்தைகளுக்கும் ஸ்ரீராம கதையைச் சொல்லி, அவர்களேயும் இம்மாதிரி ஆயிரத்தெட்டோ, நூற்றெட்டோ ராம நாமங்கள் வரும்படி சிறிய பாடல்களே எழுதச் சொல்லலாம். அதனுல் சிறிய உள்ளங்களில் ராமபக்தி ஏற்பட்டு ஸ்ரீ ராமாநுக்ரஹத்தால் அவர்களுக்கு சகல சௌக்யங்களும் ஏற்படுவது திண்ணம்.

---

## இராமாயணப் பெருமை

தனது பட்டந்தனேத் தம்பியர்க் கீயெனத்
தந்து மகிழும் தமையனும்
தமையனுர் வருமளவு மாவிரத மாகவே
தபசு புரியும் தம்பியும்
கனதனப் பாலீந்த தாய்தனேப் போலவே
கருணேசெய்திடு மதனியும்
காணுமுன் தந்தைபோல் திருவடிகள் பணியும்
கனிட்டவனுடை மனேயாட்டியும்
தினந்தினம் பரிவாகி அம்மையே என்று பேர்
செப்பும் கொழுந்தனும்
சேர்ந்துவாழ் கின்றபேர் திரேதாயு கந்தனில்
தசரதர் குமாரர் கண்டாய்
வனசமலர் கமழ்கின்ற வாவிசூழ்களமூரில்
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே.

—திருவேங்கட சதகம்.

---

## ஸ்ரீ துளஸீ ராமாயணம்



லோசந அபி4ராமம் தநுக4நஸ்யாமம்
நிஜஆயுத4 பு4ஜசாரீ |
பூ4ஷந ப3நமாலா நயநபி3ஸாலா
ஸோப4ாஸிந்து4 க2ராரீ ||

### ஸீதா கல்யாணம்

ஹிமவந்தஜிமி கி3ரிஜா மஹேஸஹி
ஹரிஹி ஸ்ரீஸாக3ர த3யீ |
திமி ஜநகராம ஹி ஸியஸமரபீ
பி3ஸ்வகல கீரதி நயீ ||
க்யௌம் கரை பி3 நய பி3தே3ஹ
கியோ பி3தே3ஹமூரதி ஸாம்வரீ |
கரி ஹோம பி3தி4வத க3ாண்டி2
ஜோரீ ஹோந லாகீ3 ப4ாம்வரீ ||

### ஸ்ரீ ராம ஜனனம்

ப4யே ப்ரக3டக்ருபாலா பரமத3யாலா
கௌஸல்யா ஹிதகாரீ
ஹரஷித மஹுதா4ரீ முநிமநஹாரீ
அத3பு4த ரூபபி3சாரீ ||

### ஸ்ரீ ராம பட்டாபிஷேகம்

ப்ரத2மதிலக ப3ஸிஷ்ட2முநி கீந்ஹா |
புநிஸப3 பி3ப்ரந்ஹ ஆயஸு தீ3ந்ஹா |
ஸுத பி3லோகி ஹரஷீம் மஹதாரீ |
ப3ார ப3ார ஆரதீ உதாரீ |

---

## ஸ்ரீமத் ராமாயண ப்ரார்த்தநா சுலோகங்கள்

நமாம்யயோத்4யாம் ஸரயூம் ஸரித்3வராம்
நமாமி ராமம் ரகு4 வம்ஸ பூ4ஷணம் |
அஜாப்3தி4 சந்த்3ரம் ந்ருபவர்ய பூ4ஷணம்
ந்ருபஸ்ய ஸர்வா: மஹிஷீர் நாமம்யஹம் || 1

நமாமி ராமம் ரகு4வம்ஸ பூ4ஷணம்
நமாமி ஸௌமித்ரி மதீவ ஸுந்த3ரம் |
நமாமி ஸ்ரீமத்3ப4ரதம் த3யாநிதி4ம்
நமாமி ஸத்ருக்4ந முத3ார த3ர்ஸநம் || 2

நமாமி ஸீதாம் ரகு4வம்ஸஜ ப்ரியாம்
நமாமி ராமாநுஜ வல்லபே4ார்மிளாம் |
நமாம்யஹம் ப4ாரத மாண்ட3வீம் ஸுப4ாம்
ஸத்ருக்4ந பத்நீம் ஸ்ருதகீர்த்தி மாஸ்ரயே || 3

நமாம்யஹம் மாருதஸூநு மாநிலம்
ஸ்ரீஜாநகீ ஜீவந ஜீவந ப்ரியம் |
ஸௌமித்ரி மித்ரம் கபிராஜ வல்லப4ம்
ஸ்ரீராம தூ3தம் ஸிரஸா நமாமி || 4

— ஸ்தோத்ர ரத்நாவளி

(ஸ்ரீ பஞ்சநாதம் ராமகுமார் பங்கூர் அவர்கள் வெளியீடு)